கதை- பால் கோப்பில்

தமிழில்- சபேசன்

மருதப்பா



வேட்டையாடுவதில் திறமைமிக்க ஒரு இளம் மனிதன் இருந்தான் .காக்கைகளும் , சிலசமயம் மக்பி பறவைகளும் அவன் வேட்டையாடும்போது கிடைக்கும் சிறு மாமிச துண்டுகளுக்காக அவனை பின்தொடர்ந்தனர் .
எருமைமாடுகளுடன் ஒரு அருமையான இணக்கத்தை அவன் உணர்ந்தான் அங்கு உள்ள மக்களுக்கு மாமிசத்தேவை ஏற்படும்போது அவன் நிச்சயமாக ஒரு எருமைக்கூட்டத்தை கண்டுபிடித்துவிடுவான் என்று நம்பினார்கள். அவன் அவற்றை வேட்டையாடும்போது எருமைகள் தாங்களே தங்களை அர்பணிப்பதற்காக அவைகளுக்கு நன்றி கூறினான் .





ஒருநாள் விடிகாலைநேரம் எருமைகள் தண்ணீர் குடிக்கவரும் ஓடையின் அந்த பகுதிக்கு வேட்டைக்காரன் சென்றான். புதர்களுக்குள் மறைந்தவாறு காத்திருந்தான். அந்த காலை சூரிய ஒளியில் தங்கள் காதுகளை திறந்து மூடிக்கொண்டிருந்த எருமைகளை கவனித்தவாறு காத்திருந்தான். சிறிது நேரத்திற்குப்பிறகு வயல்களின் வழியே கடந்து நீரோடையை நோக்கி வந்து கொண்டிருந்த ஒரு பெண் எருமைமாட்டை கண்டான் . அம்பை எடுத்து நாணில் வைத்து முறுக்கேற்றினான் .



அந்த எருமை மிக மெதுவாக வந்துகொண்டிருந்தது . எருமை மாட்டை பார்த்துக்கொண்டே இருந்த அந்த மனிதனுக்கு என்ன நேர்ந்தது என்று தெரியவில்லை, உறங்கிவிட்டது போல தோன்றியது. அனால் மீண்டும் அந்த எருமைமாட்டை பார்க்க முயற்சித்தபோது அந்த எருமை அங்கே இல்லை பதிலாக ஒரு இளம் பெண் மெல்ல நடந்து வந்து கூழாங்கற்களுக்கு அருகில் நிறைந்திருந்த நீரை குடித்தாள். அவள் அங்குள்ள பெண்கள்போல் இல்லை. அவள் உடைகள் வித்தியாசமாக இருந்தன அவள் தலை முடி சீவி முடிக்கப்படவில்லை காட்டுப்பூக்கள் சேஜ் மற்றும் புரோனி வாசம் அவளிடமிருந்து வந்தது. அவளை அவன் விரும்புவதை அவன் உடனே உணர்ந்தான்.



அவள் "நான் எருமை மாடுகளின் நாட்டிலிருந்து வருகிறேன்" என்றாள். எங்களைப்பற்றி நல்ல எண்ணங்கள் நீ கொண்டிருப்பதால் எங்கள் நாட்டுமக்கள் உன்னை சந்திப்பதற்காக என்னை இங்கே அனுப்பிவைத்தார்கள். நீ அன்பான நல்ல மனிதன் என்று அவர்களுக்கு தெரியும். நான் உனக்கு நல்ல மனைவியாவேன். எனது நாட்டு மக்கள் நம்மிடையே உள்ள பரஸ்பர அன்பு எல்லாரும்  பின்பற்றக்கூடியவகையில் உதாரணமாக இருக்கும் என்று எண்ணுகிறார்கள் .

அந்த இளம் மனிதனும் அந்த அழகான இளம் பெண்ணும் திருமணம் செய்துகொண்டார்கள் .அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான் அவனுக்கு கன்னுக்குட்டி என்று பெயரிட்டார்கள் .அவர்கள் வாழ்கை நல்லபடியாக சென்றது .ஆனால் அந்த இளம் மனிதனின் உறவினர்கள் அவன் மனைவியை விரும்பவில்லை .அவர்கள் அடிக்கடி அவர்களிடையே அன்பு குறைவான வார்த்தைகளை கூற முற்பட்டனர் .தனக்கென்று குடும்பமே இல்லாத ஒரு பெண்ணை திருமணம் செய்துகொண்டதாக கூறினார்கள் .அவள் செயல்கள் எல்லாம் வித்தியாசமாக மிருகத்தை ஒத்ததாக இருப்பதாக கூறினார்கள் . அவள் ஒருபோதும் நமது குடும்பத்தில் ஒரு நபராக ஆக மாட்டாள் என்றனர் .

ஒருநாள் வேட்டைக்காக அந்த இளம் மனிதன் தொலைவே சென்றிருந்தபோது அவன் உறவினர்கள் அவன் மனைவியிடம் வந்து கூறினார்கள் ,"நீ இங்கு வந்தே இருக்கக்கூடாது .நீ எங்கிருந்து வந்தாயோ அங்கேயே சென்றுவிடு .நீ ஒரு மிருகம் போன்றுதான் இருக்கிறாய். " என்றார்கள். இதை கேட்டவுடன் அவள் தனது மகனை அழைத்துக்கொண்டு அவர்கள் வாழ்ந்த இடத்தைவிட்டு சென்றுவிட்டாள்.





அந்த இளம் மனிதன் வீடு திரும்பியபோது அவன் மனைவியும் குழந்தையும் அந்த இடத்தைவிட்டு சென்றுவிட்டதை அறிந்தான் .என்ன நடந்தது என்று அறிந்தபோது அவன் கோபப்பட்டான் அவர்களை திருப்பி அழைத்துவர உடன் புறப்பட்டான் .

அவர்கள் சென்ற காலடிகளை தொடர்ந்து சென்றான் அது அவனை நாட்டுக்கு வெளியே கொண்டு சென்றது. பகல் முழுதும் அவன் வெட்டுக்கிளிகள் சத்தத்தை கேட்டு கொன்டே சென்றான். மாலை வந்த போது அவன்  சிறிது தூரத்தில் ஒரு குடிசை ஒன்றில் சமைக்கும் புகை வந்துகொண்டிருந்ததை கண்டான்.



அந்த குடிசைக்குவெளியே அவன் மகன் விளையாடிக்கொண்டிருப்பதை கண்டு அவன் ஆச்சரியப்பட்டான். அந்த கண்ணுகுட்டிப்பையன் அவன் அப்பாவை பார்த்ததும் அவன் நோக்கி ஓடி வந்தான் .நீங்கள் எங்களை தேடிவந்தது மிக்க மகிழ்ச்சி அப்பா , உங்களுக்கான உணவை அம்மா தயாரித்து வைத்திருக்கிறார்கள் என்று கூறி அவன் அப்பாவை கைபிடித்து உள்ளே கூட்டிப்போனான் .சமையல் வாசனை அந்த இடம் முழுவதும் நிறைந்திருந்தது . அவன் மனைவி அவன் முன்னே ஒரு முழு கிண்ணம் சூப் வைத்தாள். நான் எனது வீட்டிற்கு போகிறேன் உங்கள் உறவினர்களோடு என்னால் சேர்ந்து வாழ முடியாது .எங்களை பின் தொடராதே .பின்தொடர்ந்தால் உனக்கு ஆபத்து என்றாள் ."நான் உங்களை விரும்புகிறேன் எங்கே நீயும் மகனும் செல்லுகிறீர்களோ அங்கே நானும் வருவேன் " என்றான்.

வானத்தை பார்த்தபடியே அந்த இளம் மனிதன் கண் விழித்தபோது குடிசையை காணோம் .ஒருவரும் அங்கு இல்லை .அது ஒரு கனவுபோல் இருந்தது. ஆனால் ஒரு குடிசை இருந்ததற்கான வட்டம் அந்த புல்வெளியிடை தெரிந்தது அவன் மனைவியும் மகனும் சென்றதற்கான அடையாளங்கள் தெரிந்தன .

அந்த இளம் மனிதன் அந்த அடையாளங்களை தொடர்ந்து சென்றான். அன்று மாலை அவன் அதே போல ஒரு குடிசையை சென்று அடைந்தான். அந்த கண்ணுகுட்டிப்பையன் அவன் அப்பாவை பார்த்ததும் அவன் நோக்கி ஓடி வந்தான். “அப்பா நீங்கள் இனிமேல் தொடர்ந்து வருவதை அம்மா விரும்பவில்லை. நாளைக்கு அவள் இந்த ஆற்றை வற்ற  செய்வாள், அனால் உங்களுக்கு தாகம் எடுத்தால் நான் வந்த வழியில் பாருங்கள் உங்களுக்கு தண்ணீர் கிடைக்கும்” என்றான்.

அன்று இரவு அவன் மனைவி “ என் மக்கள் அந்த பெரிய நதிக்கு அந்த கரையில் வசிக்கிறார்கள், அவர்களுக்கு நான் வீடு திரும்புவது தெரியும். அதோடு அவர்கள் உங்கள் உறவினர்கள் என்னை நன்றாக நடத்தவில்லை என்று கோபமாக இருக்கிறார்கள். என்னை பின் தொடர்ந்து வர வேண்டாம், உங்களை அவர்கள் கொன்று விட கூடும்” என்றாள். அவன் “நான் எப்பொழுது சாகிறேன் என்பது எனக்கு பெரிதில்லை, ஏனெனில்  உங்கள் இரண்டு பேரையும் நான் மிக விரும்புகிறேன், அதனால் உங்களோடுதான் நான் வருவேன் என்றான்.

அன்று இரவு அவன் அவளை ஒரு கயிறு கொண்டு அவனோடு சேர்த்து கட்டி கொண்டான். அவள் நீண்ட கூந்தலை கையில் சுற்றி கொண்டு தூங்கினான்.

ஆனால் மீண்டும் அந்த இளம் மனிதன் தனியாகவே கண் விழித்தான் . அந்த புல்வெளியில் எருமைமாடும் ,அதன் கன்றுக்குட்டியும் உடன் சேர்ந்து சென்றதற்கான அடையாளம் மட்டும் தெரிந்தது . அந்த அடையாளங்களால் அவன் ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்தபோது சிறு பறவைகள் கூட்டம் ஒன்று அவன் அருகே பறந்து சென்றது ."அவர்கள் வீடு சென்றுவிட்டனர் . அவர்கள் வீடு சென்றுவிட்டனர் ." என்று பறவைகள் கத்தின .



அதைக்கேட்டு நடந்து சென்ற அடையாளங்கள் தனது மனைவி ,குழந்தையினுடையது என்று அறிந்தான் .அந்த அடையாளங்கள் உயரமான இடத்திற்கு கூட்டிச்சென்றன .வரிசையான மரங்கள் வளைந்துசெல்லும் ஆற்றை நோக்கி சென்றன . ஆறு காய்ந்திருந்தது .இருந்தாலும் அவன் பையன் கூறியது போல அந்த குட்டி மாட்டின் காலடி தடத்தில் மட்டும் தண்ணீர் இருந்தது.





அந்த உயரமான இடத்திலிருந்து எருமைமாட்டு தேசத்தின் பல்வேறு அமைப்புக்களைக்கண்டு ஆச்சரியப்பட்டான் அவன் கீழே இறங்கி ஆற்றை நோக்கி நடந்தபோது ஒரு கண்ணுக்குட்டி அவனை நோக்கி ஓடிவந்தது ."அப்பா;திரும்பி சென்றுவிடுங்கள் .அவர்கள் உங்களை கொன்று விடுவார்கள் .திரும்பிவிடுங்கள் ."என்றது .அனால் அந்த இளம் மனிதன் பதில் கூறினான் ."இல்லை மகனே நான் எப்போதும் உன்னுடனும் ,உன் அம்மாவுடனும் இருப்பேன் ."என்றான் "



அப்பபடியெனில் தங்கள் வீரமானவர்தான் ."என்றான் அந்த கன்னுக்குட்டி பையன் .என்னுடைய தாத்தாதான் இந்த எருமை தேசத்துதலைவர் .எந்தவிதத்திலும் பயப்படாதீர்கள் பயந்தால் அவர்கள் உங்களை நிச்சயமாக கொன்றுவிடுவார்கள் .என்னையும் ,என் அம்மாவையும் அடையாளம் காணும்படி உங்களிடம் கூறுவார்கள் . ஆனால் உங்களுக்கு நாங்கள் எல்லோரும் ஒரேமாதிரியாகத்தான் தெரிவோம் எங்களை வரிசையாக அவர்கள் நிறுத்தும்போது நான் எனது இடது காதை ஆட்டுவேன் , அதிலிருந்து என்னை தெரிந்துகொள்ளுங்கள் . அம்மாவின் பின்புறம் ஒரு இறகை ஒட்டிவைத்திருப்பேன் .அதைக்கொண்டு அம்மாவையும் கண்டுகொள்ளுங்கள் .நீங்கள் எங்கள்  இருவரையும் கண்டு பிடித்துவிட்டால் நீங்கள் பாதுகாப்பாக இருப்பீர்கள் . எச்சரிக்கையாக இருங்கள் ."என்றான் .



அந்த வயதான எருமை உரக்க கத்திகொண்டே கூட்டாத்திலிருந்து வெளியே வந்தது . அதன் கால் பட்டதும் பூமி அதிர்ந்தது .அது சரியாக அந்த இளம் மனிதன் முன் வந்து நின்றது பூமியை நோண்டி பூமி புயலை வரவழைத்தது கொம்பிலிருந்த செறிவான தூரிகையை களை கோபத்தில் ஆட்டியது . அந்த இளம் மனிதன் சிறிதுகூட பயம் இன்றி அப்படியே நின்றான் '.
ஆகா இந்த மனிதன் உறுதியான மனம் படைத்தவனாக இருக்கிறான் ". என்று மூச்சிரைக்க கூறியது ."உன்னுடைய தைரியத்தால் நீ உன்னை காப்பாற்றிக்கொண்டாய் .என் பின்னால் வா " என்றது .அந்த வயதான எருமை வழியை காட்டியது மற்ற மாடுகளும் அமைதியாக பின் தொடர்ந்தன . நடுவே வர்ணம் பூசப்பட்ட குடிசை இருந்தது .

முழு எருமைமாட்டு நாடும் அழகான வட்டங்களால் ஆக்கப்பட்டிருந்தது .கன்றுக்குட்டிகள் உள்வட்டத்தில் இருந்தன .அடுத்து சற்று வயதான அடுத்தவட்டம் .பசுக்களும் எருமைகளும்  அதனதன் வயதிற்கேற்ப அடுத்தடுத்த வட்டத்தில் நின்றிருந்தன .

"அனைவரும் நிமிருங்கள் " என்றது .அனைவருக்கும் கேட்கும் வண்ணம் கூறியது . " உன் உறவினர்கள் என் மகளை அவமதித்துவிட்டார்கள் .ஆனால் நீ உன் மனைவியையும் மகனையும் விரும்புவதால் இங்கு வந்திருக்கிறாய் எனவே அவர்களை கண்டுபிடித்துக்கொள் என்றது .கண்டுபிடிக்காவிட்டால் உன் ஒரு சொட்டு ரத்தம்கூட மீதம் இல்லாதவகையில் புரட்டிஎடுத்துவிடுவோம் ." என்றது .

அந்த இளம் மனிதன் இளம் கண்ணுகுட்டிகள் முன் சென்றான் அவை தோற்றத்தால் ஒரேமாதிரி தெரிந்தன . ஆனால் ஒன்றுமட்டும் ஈயினால் அட்டியதுபோன்று காதை ஆட்டியது .அவன் தன கையை அந்த கன்னுகுட்டி தலையில் வைத்தான் "என் மகன் "என்றான் . "என் மகன் என்றான் . கூட்டத்திலிருந்து ஆச்சர்ய ஒலி கிளம்பியது ."இவன் ஒரு அற்புதமான மனிதனாக இருக்கவேண்டும் ."என்றார்கள் .



பிறகு அவன் பசுக்கள் நின்றிருந்த வட்டத்தை சுற்றி வந்தான் .மீண்டும் அவைகள் பார்க்க ஒரே தோற்றத்தில் இருந்தன .அவள் பின்புறத்தில் ஒட்டிக்கொண்டிருந்த முட்செடியை வைத்து மனைவியை கண்டுபிடித்து "என் மனைவி " என்றான்.

மீண்டும் எருமை மாடு நாட்டு கூட்டத்திலிருந்து ஆச்சர்ய ஒலி கிளம்பியது ."அவன் தன்  மனைவியை அழைத்துவிட்டான்".





இதோ எதிரில் இருக்கும்  இந்த மனிதன் "தன மனைவியையும் ,குழந்தையையும் மிகவும் விரும்புகிறான், அவர்களுக்காக அவன் தன் உயிரைவிடவும் தயாராக இருக்கிறான் ."என்று அந்த வயதான எருமை கூறியது .அவனை நம்முள் ஒருவணாக்கவேண்டும் .வேறு நினைவுகள் இன்றி நாம் அனைவரும் இதை செய்துமுடிக்க ஒன்றாக வேண்டும் என்றது.
அந்த இளம் மனிதன் அந்த குடிசைக்கு அழைத்துச்செல்லப்பட்டான். அதற்குள் அவனை விட்டு கதவை மூடி கட்டி விட்டார்கள்.
அவன்  எருமை மாட்டின் கொம்பும் குளம்புகளும் உள்ள தோலை அணிந்து கொண்டு உள்ளே இருந்தான். மூன்று நாட்கள் அவனை எருமைகள் சூழ்ந்திருந்தன. தொடர்ந்து எருமைமாட்டு முனகலுடன் கூடிய காற்று நிரம்பியிருந்தது.



நான்காவது நாள் அந்த எருமைகள் திடீரென்று பாய்ந்து குடிசையை புரட்டி எடுத்தன .அந்த இளம் மனிதன் சேரும் சகதியுமாக மாறும் வரை புரட்டியெடுத்தன அவன் உடலிலிருந்து மூச்சை உறிஞ்சி வெளியே எடுத்துவிட்டு ,புது மூச்சை அவன் உள்ளே நிரப்பின .அவன் மனித வாடை போகும் வரை அவனை புரட்டி புரட்டி நக்கின. அவன் எழுந்து நிற்க முயன்றான் அனால் அவனால் முடியவில்லை. அவன் எருமை போல குரல் எழுப்பவே, எருமை மாடுகள் மேலும் மேலும் முயன்றது.

கடைசியில் அவன் தனது நான்கு கால்களில் ஒரு இளம் எருமை மாடாக எழுந்து நின்றான்.

அது ஒரு அற்புதமான நாள் .மனிதர்களும் எருமைமாடு நாட்டினர்க்கும் உறவு ஏற்பட்டுவிட்டது .அது கடைசிவரை நிலைத்து நிற்கும் .ஒரு தைரியமான இளம்மனிதன் தனது மனைவிமீதும் ,குழந்தைமீதும் கொண்ட அன்பினால் எருமையாக மாறிப்போனது பற்றி நினைவுகூறப்படும். இன்னும் பிறக்காத எதிர்கால குழந்தைகளுக்காக அந்த எருமைகள் தங்கள் உடலை கொடுக்க சம்மதித்தன. அது அந்த ஆண்டவன் விருப்பம்.



நாம் எல்லாரும் உறவினர்களே!!

